உ

# सूक्तिमाला

संस्कृतश्री ग्रन्थमाला - गुच्छः - १

# ஸூக்திமாலா

ஸம்ஸ்க்ருதஸ்ரீ கிரந்தமாலா - கொத்து - 1


தொகுத்தவர்:

வைத்ய ஸ்ரீ S.V. ராதாகிருஷ்ண சாஸ்திரீ



வெளியிடுபவர்:

**SAMSKRIT EDUCATION SOCIETY (Regd.)**

New 148-150, Old No. 98-99, Luz Church Road,

**Mylapore, Chennai - 600 004. Phone : 2466 1401.**

2004] [Rs. 4-00

# सूक्तिमाला

## ஸூக்திமாலா

अम्भोधिक्षालितपदां हिमालयकिरीटिनीम्।
आनर्तासमबाहाढ्यां वन्दे भारतमातरम्॥ १॥

கடலால் திருவடிகளை அலம்பிக் கொள்பவளும், இமாலயத்தைக் கிரீடமாக்கிக் கொண்டவளும் ஆனர்தமும் (குஜராத்தும்) அஸமமும் (அஸாமும்) ஆன இருகைகள் கொண்டவளுமான பாரதத் தாயை வணங்குகிறேன்.

भजेमहि निपीयैकं मुहुरन्यं पयोधरम्।
मार्गन्तं बालमालोक्य हसन्तावादिदम्पती॥ २॥

ஒரு ஸ்தனத்தில் (பால்) பருகிவிட்டு மற்றொரு ஸ்தனத்தைத் தேடுகிற சிசுவைக் கண்டு சிரிக்கிற (அர்த்தநாரீச்வர வடிவிலுள்ள ஆதி தம்பதிகளை வழிபடுவோம்.

सभाकल्पतरुं वन्दे वेदशाखोपशोभितम्।
शास्त्रपुष्पसमाकीर्णं विद्वद्भ्रमरमण्डितम्॥ ३॥

ஸபை எனும் கல்பகமரம், வேதம் எனும் கிளைகளால் அழகானது. சாஸ்திரங்கள் எனும் பூக்கள் நிரம்பியது. அறிவாளிகளாகிற வண்டுகளால் மொய்க்கப் பெற்றது. அதனை வணங்குகிறேன்.

अकृत्यं रोचतेऽज्ञाय, लुब्धाय सरसं वचः।
पङ्कः सूकरबृन्दायाजानुचर्याऽलसात्मने॥ ४॥

முட்டாளுக்குச் செய்யத் தகாததைச் செய்வதும். உலோபிக்கு வஞ்சகப் பேச்சும், பன்றிக் கூட்டத்திற்குச் சேறும். சோம்பேறிக்கு ஆட்டு மந்தைபோல் முன் செல்வதைப் பின் தொடர்வதும் பிடிக்கும்.

अक्रोधनः क्रोधनेभ्यो विशिष्टः तथा तितिक्षुः अतितिक्षोर्विशिष्टः।
अमानुषेभ्यो मानुषाश्च प्रधानाः विद्वान् तथैवाविदुषः प्रधानः॥ ५॥

கோபமற்றவன் கோபிப்பவனைவிடச் சிறந்தவன். சகித்துக் கொள்பவன் சகிப்புத் தன்மையற்றவனைவிடச் சிறந்தவன். மனிதத் தன்மையில்லாதவனைவிட மனிதத் தன்மையுள்ளவன் சிறந்தவன். அறிவிலியைவிட அறிவாளி சிறந்தவன்.

अञ्जनस्य क्षयं दृष्ट्वा वल्मीकस्य च सञ्चयम् ।
अवन्ध्यं दिवसं कुर्यात् दानाध्ययनकर्मसु ॥ ६ ॥

நன்கு தீட்டிய மை மறைவதையும் புற்று சிறிது சிறிதாகக் கூடுவதையும் கண்டு தானம், கல்வி நற்பணி இவற்றில் பொழுதை வீணடிக்காமல் ஈடுபட வேண்டும்.

अतिवादांस्तितिक्षेत नावमन्येत कञ्चन ।
न चेमं देहमाश्रित्य वैरं कुर्वीत केनचित् ॥ ७ ॥

பிறரது அவதூறுகளைப் பொறுத்துக் கொள்ள வேண்டும். எவரையும் அவமதிக்கக் கூடாது. இந்த (அழிவுறுகிற) உடலை நம்பிப் பகை பாராட்டக் கூடாது.

अत्यासक्तिर्विनाशाय अतिदूरं तु निष्फलम् ।
सेवा मध्यमभावेन राजवह्निगुरुस्त्रियाम् ॥ ८ ॥

அரசன், நெருப்பு, குரு, பெண் இவர்களுடன் அதிக நெருக்கமும் கொள்ளக் கூடாது. வெகு தூரத்திலிருப்பதும் பயனற்றது. நடுநிலையில் நின்று பழகுவது நல்லது.

अनसूया क्षमा शान्तिः सन्तोषः प्रियवादिता ।
कामक्रोधपरित्यागः एतच्छिष्टस्य लक्षणम् ॥ ९ ॥

அசூயையின்மை, பொறுமை, அமைதி, மனநிறைவு, அன்புடன் பேசுதல், ஈனப் பொருள் நாட்டமும் ஆத்திரமும் இன்மை, இது நல்வழிப்பட்டவனின் அடையாளம்.

अनुदारं न मननं अकुलीनं न भाषणम् ।
अस्नेहार्द्रं न नः कर्म श्रेयसे कल्पते सदा ॥ १० ॥

கீழ்த் தரமான சிந்தனையில்லை. குலத்திற்கு ஒவ்வாத பேச்சு இல்லை. கனிவும் நெகிழ்வுமற்ற செயல்முறை இல்லை. இது எப்போதும் மேன்மை தரவல்லதே.

अनुपकरणता च बाल्ये न सुखाय श्रीश्च वार्धक्ये ।
पुष्पाणीवाकाले सौभगमिव भर्तृहीनायाः ॥ ११ ॥

பால்யத்தில் வசதியின்மையும், முதுமையில் செல்வச் செழிப்பும், கணவனை இழந்தவளின் அழகும் அகாலத்தில் பூத்த பூக்கள் போல் இன்பத்திற்கு உதவாது.

अपार्थो विदुषामग्रे व्यवहारो न तिष्ठति ।
पुरो भास्कर भासां हि नीहारो नावतिष्ठते ॥ १२ ॥

பொருட் செறிவற்ற பேச்சு அறிஞர் முன் எடுபடுவதில்லை. சூரிய ஒளிக் கெதிரே பனி தலை காட்டாது.

अभिवादनशीलस्य नित्यं वृद्धोपसेविनः ।
चत्वारि तस्य वर्धन्ते आयुः प्रज्ञा यशो बलम् ॥ १३ ॥

வணக்கத்துடன் பழகிப் பெரியோர்களுக்குப் பணிவிடை புரிபவனுக்கு ஆயுளும், ஆழ்ந்த அறிவும், புகழும் வலிவும் வளரும்.

अमृतं शिशिरे वह्निः अमृतं प्रियदर्शनम् ।
अमृतं राजसंमानं अमृतं क्षीरभोजनम् ॥ १४ ॥

பனி நாளில் நெருப்பு (சூடு) அமுதம். அன்பனைக் காண்பது அமுதம். அரசனது பாராட்டு அமுதம். பாலும், சோறும் உண்பது அமுதம்.

अरुन्तुदं परुषं तीक्ष्णवाचं वाक्कण्टकैर्वितुदन्तं मनुष्यान् ।
विद्यादलक्ष्मीकतमं जनानां मुखे निबद्धां निरृतिं वहन्तम् ॥ १५ ॥

அருவருக்கும்படி பேசுபவனும், வரண்ட பேச்சாளனும், கொடுஞ் சொல் பேசுபவனும், சொல்லால் முள் போல் குத்திப் புண்படுத்துபவனும், மூதேவி பிடித்தவன், வாயால் அழிவை இறுகப் பற்றியவன்.

अहिंसयैव भूतानां कार्यं श्रेयोऽनुशासनम् ।
वाक्चैव मधुरा श्लक्ष्णा प्रयोज्या धर्ममिच्छता ॥ १६ ॥

எந்த உயிரினத்தின் மேம்பாடும் நல்வழிப் படுத்தலும் அஹிம்ஸையால் (துன்புறுத்தலின்றி) செய்ய வேண்டும். நன்மை விரும்புபவனால் இனியதும் மென்மை மிக்கதுமான சொல் பயன்படுத்தப்பட வேண்டும்.

अहो बत महत्कष्टं विपरीतमिदं जगत् ।
येनापत्रपते साधुः असाधुस्तेन तुष्यति ॥ १७ ॥

இது ஒரு பெரிய கஷ்டம். உலகத்தின் போக்கே தலை கீழாகக் காண்கிறது. நல்லவன் எதனைச் செய்யக் கூசுவானோ கெட்டவன் அதனைச் செய்து மகிழ்கிறான்.

आक्रुश्यमानो नाक्रोशेत् मन्युरेव तितिक्षतः ।
आक्रोष्टारं निर्दहति सुकृतं चास्य विन्दति ॥ १८ ॥

தன்னை உரக்க நிந்திப்பவனையும் நிந்திக்கக் கூடாது. அப்படிப் பொறுத்துக் கொள்பவனின் மனத்தினுள் அடக்கிக்

கொண்ட கோபம் அவனை நிந்திப்பவனை எரித்து விடுவதுடன் நிந்திப்பவனின் புண்யத்தையும் பொறுத்தவன் பெறுவான்.

आचारः क्षुधयाऽपैति चित्तशुद्धिस्तमोभरात् ।
धृतिश्चित्ताद्विपत्काले मानो वित्तजिहीर्षया ॥ १९ ॥

பசி நுழைய ஒழுக்கம் விலகும். அறியாமையின் சுமையால் மனத் தூய்மை அகலும். எதிர்பாராமல் நெருக்கடி நேர உறுதி குலையும். பிறரது உடமையைப் பறிக்கிற எண்ணம் வர மானம் விலகும்.

आचार्यो ब्रह्मणो मूर्तिः पिता मूर्तिः रमापतेः ।
माता मूर्तिः पृथिव्यास्तु भ्राता स्वो मूर्तिरात्मनः ॥ २०॥

(நல்வழியில் வாழ்ந்து வழிகாட்டுகிற) ஆசிரியர் ப்ரஹ்மாவின் உருவம். (காக்கும்) தந்தை விஷ்ணுவின் உருவம். தாய் (பொறுமைமிக்க) பூமியின் வடிவம். கூடப் பிறந்தவன் தனது மாற்றுருவம்.

आत्मनाम गुरोर्नाम नामातिकृपणस्य च ।
श्रेयस्कामो न गृह्णीयात् ज्येष्ठापत्यकलत्रयोः ॥ २१ ॥

தன் பெயர், தன் குருவின் பெயர், வாழ்க்கையில் மிகவும் கீழ் நிலைக்கு வந்தவனின் பெயர், மூத்த மகனின் பெயர், மனைவியின் பெயர் இவற்றை மேனிலை விரும்புபவன் நேரிடையாகக் குறிப்பிடக் கூடாது.

आत्म-स्वजन-मित्राणां देशस्य च हिते रतिः ।
मूलमेतद्धि धर्माणां देशकालाविरोधतः ॥ २२ ॥

தனக்கும் தன் உற்ற்ார் உறவினர், நண்பர், தனது தேசம் இவற்றிற்கும் இடத்திற்கும் காலத்திற்கும் முரண்படாதவாறு இதமாக இருப்பதில் ஆர்வமே தர்மத்தின் வேர்.

आद्रियन्ते वचांस्येव गुणवन्ति विपश्चितः ।
आस्वदन्ते फलान्येव रसवन्ति जनाः खलु ॥ २३ ॥

அறிவாளிகள் பொருள் செறிவுள்ள சொற்களையே பெரிதும் ஆதரிப்பர். மக்கள் சுவை மிக்க பழங்களைத் தானே சுவைப்பர்?

आपदर्थे धनं रक्षेत् दारान् रक्षेद्धनैरपि ।
आत्मानं सततं रक्षेत् दारैरपि धनैरपि ॥ २४ ॥

எதிர்பாராத கேடு நேரலாம் என்று செல்வத்தை சேமிக்க வேண்டும். அந்த செல்வத்தைக் கொண்டு மனைவி மக்களைக் காக்க வேண்டும். செல்வத்தாலும், மனைவி- மக்களாலும் தன்னைக் காத்துக் கொள்ள வேண்டும்.

आपदि मुञ्चेयुः स्वान्प्राणानपि नो नमन्ति शत्रुपदोः ।

भिद्येत दुर्वह भराक्रान्तो न नमेन्महान् शिलास्तम्भः ॥ २५ ॥

நெருக்கடியில் தன் உயிரையும் விடுவர். எதிரியின் கால்களில் விழமாட்டார். பெரிய கல் தூண் சுமக்க முடியாத சுமையால் அழுத்தப்பட்ட போதும் ஒடியுமே தவிர வளையாது.

आपन्नोऽपि च सुजनः सुजनो, हीनस्तु विपदि दृश्यते हीनः ।

भिन्नोऽपि कनककलशः कनकं, भिन्नस्तु मृद्धटो मृद्धि ॥ २६ ॥

நல்லவன் ஆபத்தில் சிக்கினாலும் நல்லவனாவே இருப்பான். கீழ் மகன் ஆபத்தில் கீழ் மகனாகவே இருப்பான். தங்கக் கலசம் உடைந்தாலும் தங்கமே. மண் கலசமோ உடைந்தால் மண்ணே.

आयुधतामेति तृणमहो बलिनः ॥ २७ ॥

வல்லவனுக்குப் புல்லும் ஆயுதமே. விந்தையல்ல வா?

आयुर्वित्तं गृहच्छिद्रं रहस्यं मन्त्रमौषधम् ।

तपो दानावमाने च नव गोप्यानि कारयेत् ॥ २८ ॥

ஆயுள் (வயது), சொத்து, குடும்பத்தில் காண்கிற ஓட்டைகள் (குறைகள்) ரஹஸ்யம், மந்த்ரம், மருந்து, தவம், தானம், (தனக்கு நேர்கிற) அவமானம் இவற்றைப் பிறரறியாதபடி காக்க வேண்டும்.

आरभन्तेऽल्पमेवाज्ञाः कामं व्यग्रा भवन्ति च ।

महारम्भाः कृतधियः तिष्ठन्ति च निराकुलाः ॥ २९ ॥

அசடுகள் சிறு சிறு பணியைத் தொடங்குவர். அது நிறைவுறப் பதட்டப்படுவர். தேர்ந்த அறிவாளிகளோ பெரிய பணிகளைத் தொடங்குவர். பதட்டமின்றி நிலைத்துச் செயல்படுவர்.

आलस्यं हि मनुष्याणां शरीरस्थो महान् रिपुः ॥ ३० ॥

சோம்பல் என்பது மனிதரின் உடலுக்குள் உள்ள பெரும் எதிரி.

आशा दुरन्ता पापिष्ठा न यया शान्तिराप्यते ।
यस्या नालं विश्वमेतत् यतयोऽप्यनया जिता: ।। ३१ ।।

எத்தனை பெற்றும் நிறைவு காணாத எல்லை காணாத எதிர்பார்ப்பு (ஆசை) பெரும் பாபத்தின் விளைவாகும். அதற்கு இந்த உலகமே போதாது. துறவிகளும் இதனிடம் தோற்றுள்ளனர்.

आशां पिशाचीं विद्धयेषा भ्रामयत्यवशं नरम् ।
उच्छिष्टपर्ण विक्षेपप्रेक्षकं कुक्कुरं यथा ।। ३२ ।।

எதிர்பார்ப்பு எனும் ஆசை ஒரு பிசாசு என்றறிவாய். அது மனிதனைத் தன் நிலை இழக்கச் செய்கிறது. எச்சிலிலை விழுவதை உற்று நோக்குகிற நாய்போலாக்குகிறது.

इक्षुर्माधुर्यरहित: न खाद्यं नेन्धनं तथा ।
गुणहीनो बुध: शुष्कशल्कतुल्यो वृथाजनि: ।। ३३ ।।

இனிப்பற்ற கரும்பு உணவுமாகாது, விறகுமாகாது. குணங்களற்ற பண்டிதன் காய்ந்த பழத்தோல் போன்றவன். பயனற்ற பிறவி.

इति दद्यां इति यजे, इत्यधीये इति व्रती ।
इत्येतानि भयान्याहु: तानि वर्ज्यानि सर्वश: ।। ३४ ।।

இவ்வாறு வழங்குவேன் ! இவ்வாறு வழிபடுவேன்! இவ்வாறு கற்பேன் ! எனக் கோட்டை கட்டாதே ! பயம் தரும் பின்விளைவு உண்டு இத்தகைய சிந்தனைகள் தவிர்க்கத் தக்கவை.

इन्द्रियाणां जयाच्छूर: पण्डितो धर्मचर्यया ।
हितप्रियोक्तिभिर्वक्ता दाता संमानदानत: ।। ३५ ।।

புலன்களை வெல்வதால் சூரனாகிறான். நேர்மையுள்ள நடைமுறையால் பண்டிதனாகிறான். இதமாகவும் பிரிய மாகவும் பேசுவதால் பேச்சாளன். மதித்து வழங்குவதால் கொடையாளி.

ईश्वरो विपदि ध्यातो न प्रसीदति मय्यहो ।
कुतोऽहं संपदि सुखे न स्मृतोऽपीति पृच्छति ।। ३६ ।।

நெருக்கடி நேர்ந்தபோது ஆழ்ந்து த்யானித்தும் ஈசன் என்னிடம் பரிவு காட்டவில்லை. இது பரிதாபமானது. செழிப்பிலும் இன்பத்திலும் என்னை நீ நினைக்கக் கூட இல்லையே ! என்று அவர் கேட்கிறார்.

उत्साहो मन्त्र मूलं स्यादिति नीतिविदां मतम्।
प्रभुशक्तिर्मन्त्रमूला तस्मादुत्साहवान् भवेत्॥ ३७॥

செயலில் ஆர்வத்துடன் ஈடுபடுவது தான் திட்டமிடுவதன் அடிப்படை. நல்ல திட்டத்தையொட்டித் தான் செயல் நிறைவிற்கேற்ற ஆற்றல் ஏற்படும். அதனுல் செயலில் தீவிர ஆர்வத்துடன் ஈடுபட வேண்டும்.

उद्धरत्युत्तमो वंशं मध्यमस्तमुपेक्षते।
अधमस्तमधः कुर्यात् न कोऽप्यन्यथयेदिदम्॥ ३८॥

நற்பண்புமிக்கவன் தனது பிறந்த குலத்தை உயர்த்துகிறுன். பண்பில் ஆர்வமில்லாதவன் தன் குலத்தைப் பொருட்படுத்தமாட்டான். கீழ்மகன் குலத்தைக் கீழ் நிலைக்குக் கொணர்வான். இதனை எவரும் மாற்ற இயலாது.

ऋणं ददन्नुत्तमर्णो भवत्याह्लादकः शशी।
आकांक्षमाणस्तच्छुद्धिं ऋणादातुर्यमो भवेत्॥ ३९॥

கடனுகப் பணம் தருகிறவன் சந்த்ரனைப் போல் மகிழ்விப்பான். கடனைத் தீர்க்கக் கோருபவன் கடன் வாங்கினவனுக்கு யமனுவான்.

एकः प्रजायते जन्तुः एक एव प्रलीयते।
एकोऽनुभुङ्क्ते सुकृतं एक एव च दुष्कृतम्॥ ४०॥

மனிதன் தனியாகப் பிறக்கிறுன். தனியாகவே மறைகிறுன். தான் செய்த நல்வினையையும் பாபத்தையும் தனி ஒருவனே அனுபவிக்கிறுன்.

एतावान् पुरुषस्तात कृतं यस्मिन्न नश्यति।
यावच्च कुर्यादन्योऽस्य कुर्यादभ्यधिकं ततः॥ ४१॥

பிறர் செய்த உதவி இவனிடம் வீணுகாது. தான் பெற்ற உதவியைவிட அதிகமாக உதவுவான். இவன் மனிதன்.

कथाऽपि खलु पापानां अलं अश्रेयसे॥ ४२॥

பாபிகளைப் பற்றிய பேச்சு கூட கேடுவிளைவிக்கப் போதுமானது.

कर्पूरक्षारयो रूपं तुल्यं, भिन्नो गुणस्तयोः।
पुण्यकृत्पापिनोरेवं नाकृतिर्मातुमर्हति॥ ४३॥

கர்பூரத்திற்கும் சார உப்பிற்கும் தோற்றம் ஒத்திருக்கும். அவற்றின் தன்மை மாறுபட்டது. புண்யம் செய்தவனுக்கும், பாபிக்கும் அவ்வாறே. தோற்றம் மட்டும் ஒன்றை அளவிடாது.

कामक्रोधौ वशे कृत्वा दम्भं लोभमनार्जवम् ।
धर्म इत्येव सन्तुष्टाः ते शिष्टाः शिष्टसंमताः ॥ ४४ ॥

ஆசை, கோபம், ஜம்பம், பேராசை, நேர்மையின்மை இவற்றைச் செயல்படாமல் அடக்கி, அறவழியில் நிறைவுடன் நிற்பவரே நன்னெறியாளர். அவரே நன்னெறியாளரால் மதிக்கப் பெறுவர்.

कामं लिखतु संस्थानं कश्चिद्रूपं च भास्वतः ।
अभित्तिविहितालम्बं आलोकं विलिखेत्कथम् ॥ ४५ ॥

ஒருவன் ஸூர்யனின் வடிவத்தையும் நிறத்தையும் அழகையும் சித்திரமாக வரையலாம். (சுவர் முதலியவை அதனைத் தாங்கும்). ஆனால் சுவர் முதலிய ஆதாரப்பிடிப்பை எதிர்பாராத ஸூரியனின் வெளிச்சத்தை எப்படி வரைவான் ?

का श्लाघा गुणिनां ? क्षमा । परिभवः कः ? यः स्वकुल्यैः कृतः ॥ ४६

குணவானுக்கு எது சிறப்பு ? பொறுமை. அவமதிப்பு எது? தன்னைச் சார்ந்தவரால் இகழப் பெறுவது.

किमु चोदिताः प्रियहितार्थकृतः कृतिनो भवन्ति सुहृदः सुहृदाम् ॥ ४७

கோரிய பிறகே தன் நண்பன் விரும்பியதையும் இதத்தையும் புரிபவன் நண்பனா ? அந்த நண்பன் மன நிறைவு பெறுவானா ?

कुम्भमध्यगतो दीपो घटे पूर्णे जलं तथा ।
न बहिर्भात्युच्चलति धीरश्च न बहिर्मुखः ॥ ४८ ॥

குடத்திலிட்ட விளக்கு வெளியே தெரியாது. நிறை குடத்தின் நீர் தளும்பாது. தீரனும் தன்னை வெளிப்படுத்திக் கொள்ள மாட்டான்..

कुल्याः कृता विशालाः कुड्यान्युपलैर्निबद्धानि ।
क्रीता बलिनो महिषाः कृतकृत्याः स्म इति मन्यन्ते ॥ ४९ ॥

அகன்ற வாய்க்கால்களை வெட்டியாயிற்று. சுற்றிச் சுவர் கற்களால் கட்டியாகி விட்டது. வலிவுள்ள எருமைகள் வாங்கியாற்று. செய்ய வேண்டியதைச் செய்து விட்டோமென விவசாயிகள் நினைக்கின்றனர். (விவசாயம் என்ற பணி இதன்பின் தான் என்று அவர்கள் நினைக்கவில்லையே).

कृतो गुणवतोऽत्यल्योऽप्युपकारो महीयते।
दुष्टोऽपकृतमात्मानं वेत्ति सूपकृतोऽपि सन्॥ ५० ॥

நற்குண முள்ளவனுக்குச் செய்த சிறு உபகாரமும் மதிக்கப் பெறும். கெட்டவன் பெரும் உதவி பெற்றிருந்தாலும் உதவியவன் தனக்குக்கேடு செய்துள்ளதாகக் கருதுவான்.

केरशल्कभवः स्नायुः गजं बध्नाति संहतः।
संहतौ जायते दार्ढ्यं वशीकारः स्थिराकृतिः ॥ ५१ ॥

தேங்காய் நாரால் ஆன கயிறு இறுகி யானையைக் கட்டுகிறது. இணைந்து இறுகினால் தான் வலிவு, மற்றதைத் தன் வசப்படுத்துகிற ஆற்றலும் செய்கிற பணி நிலைத்திருப்பதும் கூட.

क्रियाविक्रयी वैद्यो हापनीयः ॥ ५२ ॥

மருத்துவப் பணியை விலைக்குவிற்கிற மருத்துவன் தவிர்க்கத் தக்கவன்.

क्रुद्धा वृद्धिं परस्य न सहन्ते ॥ ५३॥

கோபம் கொண்டவர் பிறரது வளர்ச்சியைத் தாங்கமாட்டார்.

क्षुत्तृष्णा काममात्सर्ये मरणाच्च महद्भयम्।
पञ्चैतानि विवर्धन्ते वार्धक्ये विदुषामपि ॥ ५४ ॥

பசி, தாகம், ஆசை, பொறாமை மரண பயம் என ஐந்தும் முதுமையில் அறிவாளிக்கும் அதிகமாகும்.

क्षुत्स्वादुतां जनयति सा चाढ्येषु सुदुर्लभा ॥ ५५ ॥

பசி உணவிற்கு ருசியைத் தரும். பெரும் பணக்காரனுக்கு அது கிடைக்காதது.

खण्डीकृतमयस्तप्तं लोहकारेण योज्यते।
मनस्तु भिन्नं नैराश्यात् ईशेनापि न योज्यते ॥ ५६ ॥

துண்டான இரும்பையும், காய்ச்சிக் கருமான் ஒட்டவைப்பான். எதிர்பார்த்தது நிறைவுறாததால் நொருங்கிய மனத்தை ஈசனாலும் ஒட்டமுடியாது.

खरं लिम्पामि गन्धेन पुष्पैराभूषयामि तम्।
रुष्टः स पद्भ्यां मां हन्ति मूर्खपूजाफलं त्विदम् ॥ ५७ ॥

கழுதைக்கு சந்தனம் பூசுகிறேன். பூவால் அழகு படுத்துகிறேன். கோபம் கொண்ட அது கால்களால் உதைக்கிறது. முட்டாளை வழிபட்டதன் பலன் இது.

गुणमेव वक्ति साधुः दोषमसाधुः प्रकाशयति ।। ५८ ।।

நல்லவன் (மற்றவனிடமுள்ள) குணத்தைக் கூறுவான். கெட்டவன் அவனது தவற்றை வெளிப்படுத்துவான்.

गृहिणी यदि गेहे स्यात् अविद्यमानं न तत्र किञ्चिदपि ।
यदि नैषा यदि चोग्रा तद्गेहं व्याघ्रयुग् गहनम् ।। ५९ ।।

இல்லாள் இல்லத்திலிருந்தால் அங்கு இல்லாதது ஏதுவுமில்லை. அவளில்லாவிடிலோ, இருந்தும் கொடூரமானவளாஞலோ அந்த இல்லம் புலியுள்ள காடு.

ग्राववदधमाः कुपिता भिद्यन्ते भान्ति हेमवच्चान्ये
अम्बुनि बाणक्षतवत् क्षणिकः शाम्यति महात्मनां क्रोधः ।।

கீழ் மக்கள் கோபித்தால் கற்கள் போல் உடைவார்கள். நல்லவர் கோபித்தால் தங்கம் போலிருப்பர். நல்லோரின் கோபம், நீரில் அம்பின் குத்தல் போல் கணநேரம் பிரித்து உடன் அடங்கிவிடும்.

चक्रिणो दशमीस्थ रोगिणो भारिणः स्त्रियाः ।
स्नातकस्य च राज्ञश्च पन्था देया वरस्य च ।।
तेषां तु समवेतानां मान्यौ स्नातकपार्थिवौ ।
राजस्नातकयोश्चापि स्नातको नृपमान भाक् ।। ६१ ।।

வண்டி, 90க்கு மேற்பட்ட வயதுள்ளவன், நோயாளி, சுமை தூக்கியிருப்பவன், பெண், முற்றும் கற்றவன், அரசன், தேர்வில் வெற்றி பெற்றவன் (வரன்) இவர்களுக்கு முதலில் வழி அளிக்கப்பட வேண்டும். இவர்களுள் முற்றும் கற்றவனுக்கும் அரசனுக்கும் முதலிடம். இவ்விருவருள் முற்றும் கற்றவனே அரசராலும் மதிக்கத்தக்கவன்.

छायया रक्षति च्छत्रं गुरुः सन्मार्गदर्शनात् ।
शास्त्रं मननसंस्कारात् धार्यन्ते शिरसा ततः ।। ६२

குடை நிழல் தந்து காக்கிறது. குரு நல் வழி காட்டலாலும், சாஸ்த்ரம் சிந்திக்கும் பழக்கம் தருவதாலும் காக்கின்றனர். அதனுல் தலையால் தாங்கப்படுகின்றனர்.

छुरिकाग्राद्भवेच्छेदो न तु तत्सरुपर्वणा ।
धीस्तीक्ष्णाग्रा वेत्ति वेद्यं न तनुर्बलिनी दृढा ।। ६३ ।।

கத்தியின் கூர் முனையால் வெட்டு ஏற்படுகிறது. அதன் கைப்பிடியாலல்ல. கூர்முனையுள்ள அறிவே அறியத் தக்கதை

அறியும். வலிவும் உறுதியும் மிக்க உடலல்ல.

जिघांसन्कुरुते राजा छलेन प्रणयास्पदम् ।
स्वं गूहत्युरगो दंक्ष्यन् अविश्वासपदं नृपः ।। ६४ ।।

அரசன் ஒருவனைக் கொல்ல விரும்புபவனாக வஞ்சனையால் அவனது அன்புக் குரியவனாகிறான். அதனால் அரசன் நம்பிக்கைக்குரியவனல்ல. கடிக்க விழைகிற பாம்பு தன்னை மறைத்துக் கொள்ளும்.

जिज्ञासुः सुखमध्याप्यो विनेयः सुपथेऽश्रमम् ।
कुटिलेव नदी मूर्खो न विनेयः कुमार्गगः ।। ६५ ।।

கற்பதில் ஆர்வமுள்ளவனை எளிதில் கற்பிக்க முடியும். சிரமமின்றி நல்வழியில் திருப்பவும் முடியும். மூர்க்கன் வளைந்தோடுகிற ஆறுபோல் தவறான பாதையில் செல்வான். அவனை நல்வழிப்படுத்துவுமியலாது.

ज्ञातिः सुहृत् स्वजनो वा यथेष्टं क्षीणे वित्ते त्यज्यते मानवैर्हि ।
तथा तत्र क्षीणपुण्यं मनुष्यं त्यजन्ति सद्यः सेश्वरा देवसङ्घाः ।। ६६ ।।

உற்றார், நண்பர் மற்றும் உறவினர் செல்வம் குறைந்ததும் மனிதர்களால் கைவிடப் பெறுவர். அவ்வாறே புண்யம் குறைந்த மனிதனைக் கடவுளும், தேவர்களும் உடன் கைவிடுவர்.

तथ्यं पथ्यं प्रियं न स्वदेत किम् ? ।। ६७ ।।

உண்மை இதமாயும் இனிதாயுமிருந்தால் ருசிக்காதா ?

तुल्ये प्रियाप्रिये यस्य सुखदुःखे तथैव च ।
अतीतानागते चोभे स वै सर्वधनी नरः ।। ६८ ।।

பிரியமும் பிரிய மற்றதும், இன்பமும், துன்பமும், மற்றும் நடந்ததும், நடக்காததும் ஸமமாகத் தோன்றினால் அம்மனிதன் எல்லாச் செல்வங்களும் பெற்றவன்.

तृणानि भूमिरुदकं वाक् चतुर्थी च सूनृता ।
सतामेतानि गेहेषु नोच्छिद्यन्ते कदाचन ।। ६९ ।।

பாய், தரை, நீர், இனிய சொல் இவை நல்லோரில்லங்களில் வற்றுவதில்லை.

तैलाभ्यङ्गात् चर्मदीप्तिं व्यायामाद्बलमृच्छति ।
कर्मपाटवमभ्यासात् विद्याया लोकसंमतिम् ।। ७० ।।

தொடர்ந்து எண்ணெய்க்குளியால் தோலின் பளபளப்பையும், உடற்பயிற்சியால் வலிவையும் தொடர்ந்து பயில்வதால் செயல் நேர்த்தியையும் கல்வியால் மக்களின் நன்மதிப்பையும் பெறுகிறுன்.

दद्यास्त्वं क्षुधितायान्नं रिक्ताय वसु सञ्चितम् ।
उपकुर्याः विपन्नाय महेशस्तर्पितस्त्वया ।। ७१ ।।

பசித்தவனுக்கு அன்னமிடுவாய், ஏழைக்கு சேமித்துள்ள பொருளைத் தருவாய். விபத்தில் துன்புறுபவனுக்கு உதவுவாய். மகேசன் உன்னுல் திருப்தி பெற்றுவிட்டார்.

दया क्षमाऽनसूया च शौचानायासमङ्गलम् ।
अकार्पण्यास्पृहत्वे च सर्वसाधारणा इमे ।। ७२ ।।

பரிவு, பிறர் குற்றம் பொறுத்தல், அசூயையின்மை, தூய்மை, உடலை வீணுக வருத்தாதிருத்தல், மங்களமான எண்ணமும், சொல்லும் செயலும், கஞ்சத்தன்மின்மை, நப்பாசையின்மை, இவை பொதுச் சிறப்புகள்.

दाक्ष्यं ह्यमर्षः शौर्यं च शीघ्रत्वमिति तेजसः ।
गुणाः क्रोधाभिभूतेन न शक्याः प्राप्तुमञ्जसा ।। ७३ ।।

செயலுக்கேற்ற திறமை, போட்டியிட்டு வெல்வது (பிறரது எதிர்ப்பை ஏற்காமல் மறுப்பது) கடுஞ்செயலிலும் முன் நிற்பது, விரைவில் செயலை நிறைவுறச் செய்வது என்பது செயலாற்றலின் சிறப்புகள். கோபத்தின் வசப்பட்டவன் இவற்றைச் சிறிதும் பெறமுடியாது.

दाताऽर्थितो दित्सति नो लुब्धो वर्षत्ययाचितः ।
दत्तं दीनं नाभ्युपैति कुटिला विधिकल्पना ।। ७४ ।।

வள்ளல் யாசித்தும் தர விரும்பவில்லை. லோபி கோராமலே பொழிகிறுன். கொடுக்கப் பெற்றதும் கோரிய எளியவனைச் சென்றடையவில்லை. விதியின் செயல் முறை வக்கிரமானது.

दिष्टं बलीय इति मन्यमानो न सञ्ज्वरेत्, नापि हृष्ये त्कदाचित् ।
दुःखैर्न तप्येत् न सुखैः प्रहृष्येत् स्वमेव वर्तेत सदैव धीरः ।। ७५ ।।

விதி மிக வலியது என்று நினைத்துத் துயருறுவதோ மகிழ்ச்சியால் சிலிர்ப்பதோ கூடாது. ஏற்றத் தாழ்வைச் சமமாக உணர்ந்து தன் நிலையில் துணிவுடன் நிற்க வேண்டும்.

दीयमानमदाता स्वैः प्राणैर्वारयते सदा।
दत्तं क्षणान्नाशयति झंझावृष्टिर्यथा मरौ ।। ७६ ।।

பாலை வனத்தில் பேய்க்காற்று மழையைக் கலைப்பதும் பெய்த மழை மணலில் வற்றிப் பயன் தராதபடி செய்வதும் போல் உலோபி (பிறருக்கு எதனையும்) கொடுக்காதவனாக, பிறர் தர விழைவதையும் உயிரைக் கொடுத்துத் தடுப்பான். கொடுத்ததையும் அழிப்பான்.

दुर्व्याहृतादपेतव्यं दुःस्थिताद् दुरवेक्षितात्।
दुरासिताद् दुर्व्रजितादिङ्गिताध्यासितादपि ।। ७७ ।।

கெட்ட பேச்சு, கெட்ட நிலை, கெட்ட பார்வை, கெட்ட இடத்தில் அமர்தல், கெட்ட இடத்தைச் சென்றடைதல், கெட்ட சாடை காட்டுதல், இவற்றிலிருந்து தூர விலக வேண்டும்.

देयमार्तस्य शयनं स्थितश्रान्तस्य चासनम्।
तृषितस्य च पानीयं क्षुधितस्य च भोजनम्।। ७८ ।।

நோயாளிக்குப் படுக்கையும் (வெகு நேரம்) நின்று களைத்தவனுக்கு இருக்கையும் நாவரண்டவனுக்குக் குடிநீரும் பசித்தவனுக்கு உணவும் கொடுக்கத்தக்கது.

देहाशुद्धौ किमाचारात् चित्ताशुद्धौ शिवार्चनात्।
पात्राशुद्धौ कृतात्पाकात् वाचो मिथ्याविदूषणे।। ७९ ।।

உடலில் தூய்மை இல்லாதபோது ஆசாரத்தாலும், மனத்தில் தூய்மை இல்லாத போது சிவனை அர்ச்சிப்பதாலும், பாத்திரம் தூய்மையற்றுள்ள போது அதில் சமைத்த உணவாலும் பொய்யால் கெட்டுள்ள போது பேச்சாலும் பயனில்லை.

दैवे रुष्टे सुखं नश्येत् न धीरस्तत्र शोचते।
द्यूती सूदोऽङ्गनाजीवी पाण्डुपुत्रो गजाश्वपः ।। ८० ।।

விதி எதிர்க்கும் போது சுகம் மறையும். தீரன் அங்கு வருந்த மாட்டான். பாண்டுவின் பிள்ளை சூதாடுபவனாக, சமையல்காரனாக பெண்களை மகிழ்விப்பவனாக, யானைப் பாகனாக, குதிரைக்காவல்காரனாக நேர்ந்தது. (விராட பர்வத்தில் அஜ்ஞாதவாஸத்தின் போது).

धनं देहं ममैवेति लुब्धो रक्षति लिप्सया।
न काचोऽप्येनमन्वेति न देहो भस्मतां गतः ।। ८१ ।।

பணத்தையும், உடலையும் எனக்கு மட்டுமே எனப் பேராசையால் காக்கிறான். செல்லாக்காசும் பின்வரவில்லை. உடல் சாம்பலாகிறது.

न कुर्याद्दन्तसङ्घर्षं न कुष्णीयाच्च नासिकाम्।
नासंवृतमुखो जृम्भेत् श्वासकासौ विवर्जयेत्॥ ८२॥

பற்களை நற நறவென உரசக் கூடாது. மூக்கை நோண்டக் கூடாது. ஆடையால் முகத்தை மறைக்காமல் பெருமூச்சு விடக் கூடாது. இருமக் கூடாது.

न च पश्यति जन्मान्धः कामान्धो नैव पश्यति।
न पश्यति मदेनान्धः लोभी दोषान्न पश्यति॥ ८३॥

பிறவிக் குருடன் குறை காண்பதில்லை. அவ்வாறே காமத்தால் குருடனும், திமிரால் குருடனும், பேராசையால் குருடனும் குறை காண்பதில்லை.

नदीं तीर्त्वा गतः पारं न पोतो वस्तुवाहकः।
श्राम्यत्येकः सुखी त्वन्यः तारितो वणिगश्रमम्॥ ८४॥

ஆற்றைக் கடந்து பொருளைச் சுமந்த ஓடம் கரையேறவில்லை. வியாபாரியோ ச்ரமமின்றி கரையேறினான். உழைப்பவன் ஒருவன். இன்புறுபவன் மற்றொருவன்.

न रणे विजयाच्छूरोऽध्ययनान्न च पण्डितः।
न वक्ता वाक्पटुत्वेन न दाता चार्थदानतः॥
इन्द्रियाणां जयाच्छूरः पण्डितो धर्मचर्यया।
हितप्रियोक्तिभिर्वक्ता दाता संमानदानतः॥ ८५॥

போரில் வெல்வதால் சூரனல்ல. கற்பதால் பண்டிதனல்ல. பேசும் திறமையால் பேச்சாளனல்ல. பொருள் வழங்குவதால் கொடையாளியல்ல. புலன்களை வெல்வதால் சூரன். நேர்மையுடன் நடப்பதால் பண்டிதன். இதமாக இன்புறும்படி பேசுவதால் பேச்சாளன். மதிப்ப தருவதால் கொடையாளி.

न विधिं ग्रसते प्रज्ञा प्रज्ञां तु ग्रसते विधिः।
विधिपर्यागतानर्थान् प्राज्ञो न प्रतिपद्यते॥ ८६॥

அறிவாற்றல் விதியை விழுங்காது. விதி அறிவாற்றலை விழுங்கும். விதியால் நேர்கிற கேடுகளை அறிவாளி எதிர்பார்க்க மாட்டான்.

न सोऽस्ति वामनः कश्चित् यस्य नावश्यकी नतिः ।
न च वाऽभ्युन्नतः कश्चित् यस्योन्नति रनादृता ॥ ८७ ॥

குனிய வேண்டியிராத குள்ளனுமில்லை. உயர்வு வேண்டிராத நெட்டையனுமில்லை.

न हन्याः प्राणिनं कश्चित् हन्या लोकभयङ्करम् ।
छिन्द्या वृश्चिकपुच्छाग्रं पालितं धर्मशासनम् ॥ ८८ ॥

எந்த உயிரையும் கொல்லாதே. மக்களைத் துன்புறுத்துபவனைக் கொல்வாய். தேளின் கொடுக்கின் நுனியை நறுக்கிவிடு. இரு தர்மக் கட்டளைகளும் காக்கப்பட்டன.

ना कुपितो वेत्त्यकार्यमपि कार्यम् ॥ ९० ॥

கோபமுள்ள மனிதன் செய்யத் தகாததைச் செய்யத் தக்கதாக அறிவான்.

नानाभावा बहवो जीवलोके
दैवाधीना नष्टचेष्टाधिकाराः ।
तत्तत्प्राप्य न विहन्येत धीरो
दिष्टं बलीय इति मत्त्वाऽऽत्मबुद्ध्या ॥ ९० ॥

உலகில் பல நிலைகள் விதியின் வசப்பட்டவை. தனித்துச் செயலாற்றுகிற உரிமையை இழக்கச் செய்பவை. அது அதனை அடைந்தவன் விதி வலிது என்று எண்ணி சுய விவேகத்தால் தளரக் கூடாது.

नारुन्तुदः स्यादार्तोऽपि न परद्रोहकर्मधीः ।
ययास्योद्विजते वाचा नालोक्या तामुदीरयेत् ॥ ९१ ॥

கடுந்துயரிலுள்ளவனும் மனம் புண்படப் பேசுபவனாக, பிறரைக் கெடுப்பதில் கருத்துள்ளவனாகக் கூடாது. எந்தச் சொல்லால் பிறன் கொதிப்படைவானோ, அந்த உலகிற் கொவ்வாத சொல்லைச் சொல்லக் கூடாது.

नास्मिंस्तेनो जनपदे न कदर्यो न मद्यपः ।
न स्वैरी स्वैरिणी वेति शस्यते तत्र संवसेत् ।। ९२ ।।

''இந்த ஊரில் திருடனில்லை. குடிகாரனில்லை, ஜாரனும் வேசியுமில்லை'' என்று புகழ்பெற்ற ஊரில் கூடி வாழ வேண்டும்.

निर्गुणं सत्यमप्युक्तं बुधो न बहु मन्यते ।
कुसुमं कर्णिकारस्य निर्गन्धमिव षट्पदः ।। ९३ ।।

சொன்னது ஸத்தியமேயாயினும் நன்மை பயக்காதெனில் அறிவாளி அதனை மதிப்பதில்லை. புரசம் பூ சிவந்து அழகாயினும் மணமற்றதென வண்டு அணுகாது.

परद्रव्येष्वाभिध्यानं मनसाऽनिष्टचिन्तनम् ।
वितथाभिनिवेशश्च दूषणं कर्म मानसम् ।। ९४ ।।

பிறர் பொருளைப் பெறத் தீவிரமாகச் சிந்திப்பது, மனத்தால் பிறருக்குக் கேடு சிந்திப்பது, பயனற்றதில் ஆழ்ந்த ஆர்வமடைவது இவை மனத்தைக் கெடுப்பவை.

परनिन्दासु मौखर्यं स्वीयकार्येष्वनादरः ।
प्रद्वेषहेले गुणिषु पन्थानो ह्यापदां त्रयः ।। ९५ ।।

பிறரைப் பற்றி அவதூருகப் பேசுவதில்லை. முனைவு, தன் உரிய பணிகளில் ஆர்வமின்மை, சிறந்தவர்களிடம் வெறுப்பும், பரிகாசமும் இவை ஆபத்திற்கான மூன்று வழிகள்.

परिभवोऽरिभवो हि सुदुःसहः ।९६

எதிரியிடமிருந்து நேர்கிற அவமானம் மிகவும் பொறுக்க முடியாதது.

पश्चादापत् पुरैव मतिनाशः ।९७

ஆபத்து வரும் பின்னே, அறிவு கெடும் முன்னே.

भूतदया भूतिदायिनी पुंसाम् ।। ९८ ।।

உயிரினத்திடம் பரிவு மாந்தருக்கு மங்களச் செழிப்பைத் தரக் கூடியது.

महीयांसः प्रकृत्या मितभाषिणः ।। ९९।।

நல்லோர் இயல்பாகவே அளவுடன் பேசுவர்.

यत्र नार्यस्तु पूज्यन्ते रमन्ते तत्र देवताः । १०० ।।

எங்கு பெண்கள் மதிக்கப் பெறுகின்றனரோ அங்கு தெய்வங்கள் விளையாடுகின்றனர்.

பாடபுத்தகங்கள்:

| | |
|---|---|
| ஸம்ஸ்க்ருதஸ்ரீ பாடமாலா 1-7 பாகங்கள் ஒவ்வொரு பாகம் | ரூ. 25/- |
| ஸம்ஸ்க்ருத ஆங்கிலத் தமிழ் அகராதி | ரூ.120/- |
| சப்தமஞ்ஜரீ | ரூ. 25/- |
| தாதுமாலா | ரூ. 80/- |
| ஸம்ஸ்க்ருதஸ்ரீ வெள்ளி விழா மலர் | ரூ. 20/- |
| ஸம்ஸ்க்ருதஸ்ரீ ஆண்டு சந்தா | ரூ. 40/- |
| ஸம்ஸ்க்ருதஸ்ரீ ஆயுள் சந்தா | ரூ.400/- |

# THE SAMSKRIT EDUCATION SOCIETY

148-150 Luz Church Road, Mylapore, Chennai-600 004

Samskrita Sri Old Issues Vol. 17—26, each Rs. 20/-

**OTHER PUBLICATIONS – SPECIAL DISCOUNT 40%**

| | |
|---|---|
| **THE KRDANTARUPAMALA** a complete concordance of verbal derivatives in 5 Volumes Vol II-V in Print. Vol I only | 75/- |
| **PRATAPARUDRIYA** of Vidyanatha- | 100/- |
| **BRAHMASUTRA SANKARA BHASHYA** with commentary **BRAHMA VIDYABHARANA** of Advaitananda, 2Vols | 300/- |
| **PATANJALAYOGASUTRA** with Sadasivendra Saraswathi's Vritti and with Tippanam | 25/- |
| **BHAGAVAD GITA** with Sankara Bhashya, Anandagiri Teeka, Bhashyotkarsha Deepika | 200/- |
| **NEW MODEL SANSKRIT GRAMMAR PART I & II** by D.Krishna Iyengar | 100/- |
| The Teaching of Sanskrit | 25/- |

Postage - Registration Charges extra

Printed at : V.K.N. ENTERPRISES, Ph : 495 07 75